# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை

சாதாரண | யுதவு பரிமள மதுகர வெகுவித | வைகாசி

வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

## சென்னையில் ஆசிரியர்

சென்னை புரசவாக்கம் சர் எம். சிடி. முத்தையா செட்டியார் உயர்நிலைப் பள்ளியில், 13—5—70 முதல் 27—5—70 வரை நாள் தோறும் மாலை 7 மணி முதல் 9 மணிவரை மகாபாரத விரிவுரை, ஆசிரியர் திருமுருக கிருபானந்தவாரி அவர்களால் நிகழும்; அன்பர்கள் கேட்டு இன்புறலாம். —மானேஜர், திருப்புகழமிர்தம்.

---

## அறிவிப்பு

காஞ்சிபுரம் மெய்கண்டார் கழக வெளியீடு "அறுபத்து மூவராதிய நாயன்மார்களின் திருநட்சத்திரப் படம்" சாதாரண ஆண்டுக்குரியது வெளிவந்துவிட்டது: வேண்டுவோர் 25 பைசா தபால் தலைகள் அனுப்பி 4 பிரதிகள் பெற்றுக் கொள்ளலாம்.

விலாசம் : வி. திருஞானசம்பந்த முதலியார்,
செயலாளர், மெய்கண்டார் கழகம், காஞ்சிபுரம்.

---

## "திருக்கயிலை"

(தெய்வீக மாதப் பத்திரிகை)

ஆசிரியர் : K. Y. சுந்தரேசக் குருக்கள்

ஆண்டுச் சந்தா. ரூ. 5 - 00.
விலாசம் : ஆசிரியர், "திருக்கயிலை,"
96, சோலையப்ப முதலிதெரு, கும்பகோணம்.

---

## முக்கிய அறிவிப்பு

மணியார்டர் மூலம் காசு அனுப்பி வைக்கும் அன்பர்கள் தங்கள் விலாசங்களை, மணியார்டர் கூப்பனில் (அடிக்கட்டையில்) தவறாது எழுத வேண்டும். தவிரவும் தாங்கள் எந்தக் காரியத்துக்காக சந்தாவுக்காகவா—அல்லது எந்த எந்த புத்தகங்கள் அனுப்புவதற்காக என்பதையும் தவறாது குறிப்பிட வேண்டும். பல அன்பர்கள் இவ்வாறு செய்யாது போவதால் அவர்களுக்கு அனுப்பிவைக்க வேண்டிய புத்தகங்களைக் காலத்தில் அனுப்பி வைக்க முடிவதில்லை. முன்னர் ஏதாவது தபாலில் எழுதி யிருந்தாலும் மறுபடியும் மணியார்டர் கூப்பனில் குறிப்பிட் வேண்டியது அவசியம் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

மானேஜர், திருப்புகழமிர்தம்
89, சிங்கண்ண செட்டித் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 2.

உ

ஓம் குஹாய நம !



Acc-No-34332

# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந் திருப்புகழைக் கேளீர் தினம்"



| மலர் 35 | சாதாரணஞ—வைகாசி மீ<br>மே 1970 | இதழ் 2 |
|---|---|---|

## திருப்புகழ்

### திருவருணை

கரிமுகக் கடகளிற் றதிககற் பகமதக்
கஜமுகத் தவுணனைக் கடியானை
கடலையெட் பயறுநற் கதலியிற் கனிபலக்
கனிவயிற் றினிலடக் கியவேழம்

அரிமுகத் தினனெதிர்த் திடுகளத் தினின்மிகுத்
தமர்புரிக் கணபதிக் கிளையோனே
அயிலெடுத் தசுரர்வெற் பலைவுறப் பொருதுவெற்
றியைமிகுத் தறுமுகக் குமரேசா

நரிமிகுக் கிளைகளைப் பரியெனக் கடிவளக்
கையில்பிடித் தெதிர்நடத் திடுமீசன்
நடனமிப் படியிடத் தினுமிசைத் தரையினிற்
கரியுரித் தணிபவற் கொருசேயே

துரிபெறச் சரிபொழிற் கனவயற் கழகுளத்
துரியமெப் தரளமொய்த் திடவீறிச்
சுரர்துதித் திடமிகுத் தியல்தழைத் தருணையிற்
சுடரயிற் சரவணப் பெருமாளே.

## பதவுரை

கரிமுகம் = யானை முகத்தையும், கடகளிறு = மதத்தையும் கொண்ட யானை; அதிக கற்பகம் = சிறந்த கற்பகம் போன்றவர்; மத கஜமுகத்து அவுணனை கடி = மதங்கொண்ட யானைமுகமுடைய கஜ முகாசுரனை அடக்கிய, யானை = யானை, கடலை எள் பயறு நல்கதலியில் கனி = கடலை, எள், பயறு, நல்ல வாழைப்பழம், பல கனி = பலாப் பழம் என்ற இவைகளை, வயிற்றினில் அடக்கிய வேழம் = வயிற்றில் நிரப்பிய யானை, அரிமுகத்தினன் = அழகிய முகத்தையுடையவர், எதிர்த்திடு களத்தினில் = எதிர்த்துப் போர்புரியும் போர்க்களத்தில், மிகுந்த அமர்புரி = மிகவும் போர்புரியும், கணபதிக்கு இளையோனே = கணங்கட்கு அதிபரான விநாயகருடைய தம்பியே! அயில் எடுத்து = வேலாயுதத்தைச் செலுத்தி, அசுரர் = அரக்கர்களும், வெற்பு = கிர வுஞ்சமலையும், அலைவு உற பொருது = அலைச்சல் உறுமாறு போர் செய்து, வெற்றியை மிகுத்த = மிகுந்த வெற்றியைப்பெற்ற, ஆறு முக = ஆறுமுகங்களையுடைய, குமர ஈசா = குமாரக்கடவுளே! நரிமிகு கிளைகளை = நரியின் பெரிய கூட்டங்களை, பரிஎன = குதிரைகளாகச் செய்து, கடிவளம் கையில் பிடித்து = கடிவாளத்தைக் கையில் பிடித்து, எதிர் நடத்திடும் ஈசன் = பாண்டியன் முன்னே நடத்திய சொக்கேச ரும், இப்படி இடத்தினும் நடனம் இசைத்து = இந்த மண்ணுலகத் திலும் திருவிளையாடல் புரிந்தவரும், கரி உரித்து அரையினில் அணி பவற்கு = யானையை உரித்து அதன் தோலை இடையில் உடுத்தவரு மாகிய சிவபெருமானுக்கு, ஒரு சேயே = ஒப்பற்ற புதல்வரே! துரி பெற சரி பொழில் = காய்கனிகளின் சுமையால் சாய்ந்துள்ள சோலையிலும், கனவயற்கு = பெருமைவாய்ந்த வயலிலும், அழகு உள = அழகுடையனவும், துரிய மெய் = தூய வடிவைக்கொண்டனவு மாகிய, தரளம் மொய்த்திட, முத்துக்கள் நெருங்கிக் கிடக்க; வீறி = பெருமை மிகுந்து, சுரர் துதித்திட = தேவர்கள் துதிசெய்ய, மிகுத்து இயல் தழைத்து = இயல் தமிழ் மிகுதியாகத் தழைத்துள்ள, அருணை யில் = திருவண்ணாமலையில், சுடர் அயில் = ஒளிமிகுந்த வேலாயுதத்தை யேந்திய, சரவண பெருமாளே = சரவணத்தின் பெருமை மிகுந் தவரே!

## பொழிப்புரை

யானை முகமும், மத ஒழுக்கும் உடைய யானையும். சிறந்த கற்பகமும், மதங்கொண்ட கஜமுகாசுரனை யடக்கிய யானையும், கடலை, எள், பயறு, நல்ல வாழைப் பழம், பலாப்பழம் முதலிய வைகளை வயிற்றில் அடக்கிய யானையும், அழகிய முகமுடைய வரும், எதிர்த்துப் போர் புரியும் போர்க்களத்தில் மிகவும் போர் புரிபவரும், அழகிய கணபதிக்கு இளைய தம்பியே! அசுரர்களும் கிரவுஞ்ச மலையும் அலைவுபடுமாறு வேலை யேவிப் போர் புரிந்து

வெற்றியைப் பெற்ற ஆறுமுகங்களையுடைய குமாரக் கடவுளே! மிகுந்த நரிக்கூட்டங்களைக் குதிரைகளாகச் செய்து கடிவாளத்தைக் கையில் பிடித்து, பாண்டியன் எதிரில் நடாத்திய சொக்கேசரும், இந்தப் பூதலத்தில் திருவிளையாடல்கள் பல புரிந்து, யானையின் தோலை உரித்து உடுத்தவருமாகிய சிவபெருமானுடைய ஒப்பற்ற புதல்வரே! காய்கனிகளின் சுமையால் சாய்ந்துள்ள சோலைகளிலும், சிறந்த வயல்களிலும், அழகும் தூயவுருவுங் கொண்ட முத்துக்கள் நெருங்கிக் கிடக்க, தேவர்கள் துதி செய்ய, மிகுந்த இயல் தமிழ் தழைத்து விளங்கும் திருவண்ணமலையில், ஒளிமிகுந்த வேலையேந்தி எழுந்தருளியுள்ள சரவணத்தின் பெருமை மிகுந்தவரே !

## விரிவுரை

இத்திருப்புகழ் முழுவதும் துதிமயமானது.

**கரிமுகக் கடகளிற்று :—**

திருக்கயிலாய மலையில் மந்திரச் சித்திரச் சாலையில் சிவபெருமானும் உமாதேவியாரும் எழுந்தருளினார்கள். மந்திரச் சித்திரங்களின் இடையே சமஷ்டி பிரணவம், வியஷ்டி பிரணவம் என்ற இரு பிரணவங்கள் இருந்தன. அந்த இரு பிரணவங்களை பார்வதியும் பசுபதியும் திருக்கண் சாத்தியருளினார்கள். இரு பிரணவங்களும் ஒன்றுடன் ஒன்றுசேர, அப்பிரணவத்தில் இருந்து யானை முகத்துடன் விநாயகப் பெருமான் தோன்றியருளினார்.

இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி யென்ற மும்மதங்களைப் பொழிபவர்.

**அதிக கற்பகம் :—**

கற்பகம்—நினைத்ததைத் தரும் ஆற்றல் படைத்தது. விநாயகர் கற்பகம் போல் அடியார்க்கு நினைத்தவையனைத்தும் வழங்கும் வரதமூர்த்தி. ஆதலால் கற்பக விநாயகர் எனப்பெற்றவர்.

**" கற்பக மெனவினை கடிதேகும் "** (கைத்தல) திருப்புகழ்.

**கஜமுகத்தவுணனைக் கடி யானை :—**

கஜமுகாசுரன் எண்ணில்லாத வரங்களைப்பெற்று வானவர்களைப் பல கொடுமைகள் புரிந்து வந்தான். மாலயனாதி வானவர்கள் விநாயகப் பெருமானை வேண்டி நின்றனர். தேவர்களின் முறையீட்டுக்கு இரங்கிய விநாயகப் பெருமான், போருக்கு எழுந்தருளி, பலப்பல ஆயுதங்களை அவன்மீது ஏவினார். அக் கணைகளால் அவன் மரணமடைந்தானில்லை. தமது கொம்பை முறித்து ஏவினார். கஜமுகனுடைய கடிய கொடிய அசுர உடம்பை ஞானமயமான தந்தம் பிளந்தது. அவன் பெருச்

சாளியாக வடிவெடுத்து விநாயகரை எதிர்த்து வந்தான். விநாயகர் அதன்மீது கருணை மழை பொழிந்தருளினார். அதன் கொடுமையடங்கி தூய எண்ணம் பெற்றுப் பெருமான் முன் நின்றது. விநாயகர் அந்த மூஷிகத்தைத் தனக்கு வாகனமாகக் கொண்டு அருள் புரிந்தார்.

**கடலையெட் பயறு நற்கதலி யிற்கனிபலக் கனிவயிற் றினிலடக் கியவேழம் :—**

விநாயகர் மூலாதாரப் பொருள். அவருக்கு அவல், பொரி, கடலை, எள், பயறு, கனிகள் இவைகளை நிவேதித்து உண்பார்க்கு சத்துவ குணம் உண்டாகும்.

**அரிமுகத்தினன் :—**

அரி—அழகு. அழகிய முகத்தினன்

அரி—தெருச் சந்தி. முகம்—இடம்.

தெருச்சந்திகளான இடத்தில் இருப்பவர் விநாயகர் என்றும் பொருள்படும். திருநெல்வேலியில் சந்தி விநாயகர் கோயில் என்று ஒரு கோயில் இருப்பதும் கண்கூடு.

**நரிமிகுக் கிளைகளைப் பரியென :—**

சிவபெருமான் மாணிக்கவாசகர் பொருட்டு காட்டிலுள்ள நரிக் கூட்டங்களையெல்லாம், குதிரைகளாக்கிக் கொண்டு, வேதப் பரிமீது சென்று அரிமர்த்தன பாண்டியன்முன் நடாத்திக் காட்டியருளினார்.

சர்கஸ் (Circus) தொழில் நடத்துபவர் எல்லா விலங்குகளையும் அடக்கி மக்கள் முன் நிறுத்திக் காட்டுவர், ஆனால் நரி ஒன்று மட்டும் மனிதனுக்கு அடங்குவதில்லை. சர்க்கஸில் நரியைப் பார்க்க இயலாது. ஆகவே யாரும் செய்யாத செயலைச் சிவபெருமான் செய்து காட்டியருளினார்.

**நடனமிப்படியிடத் தினுமிசைத்து :—**

இறைவன் சுத்தவித்யா உலகத்துக்கும் அப்பாற்பட்டவன். அத்தகைய பரமன் அடியார் பொருட்டு இம்மண்ணுலகில் தமது திருவடியை வைத்துத் திருவிளையாடல் புரிந்தருளினார்.

**வானத்தில் மண்ணில் பெண்ணில்**
**மைந்தரில் பொருளில் ஆசை**
**தானற்றுத் தனையும் மற்றுத்**
**தத்துவம் உணர்ந்த யோகர்**
**ஞானக்கண் கொண்டே யன்றி**
**நாடருஞ் சோதி மண்ணோர்**
**ஊனக்கண் கொண்டுங் காண**
**உடன் விளை யாடலுற்றார்,**

—திருவிளையாடற்புராணம்.

**துரிபெறச் சரிபொழில் :—**

துரி—சுமை. பழுத்த மரங்கள், காய் கனிகளின் சுமை தாங்காது சாய்ந்து காட்சி தருகின்றன.

**துரிய மெய்த்தரளம் :—**

துரியம்—தூய்மை. தூய்மையான உருவத்தையுடைய முத்துக்கள். திருவண்ணுமலையில் சோலைகளிலும் வயல்களிலும் முத்துக்கள் மிகுந்து ஒளிவீசுகின்றன.

**இயல் தழைத்தருணையில் :—**

புலவர்கள் இயல் தமிழால் இறைவனைப் பாடிப் பரவுகின்ற திருவருணை.

திருவண்ணுமலையில் பல ஞானிகளும் சிறந்த புலவர்களும் வாழுகின்ருர்கள். மிகப் புனிதமான ஞானபூமி.

## திருப்புகழ்

கருநி றஞ்சிறந் தகல்வன புகல்வன
மதன தந்திரங் கடியன கொடியன
கனக குண்டலம் பொருவன வருவன பரிதாவும்
கடலு டன்படர்ந் தடர்வன தொடர்வன
விளையு நஞ்சளைந் தொளிர்வன பிளிர்வன
கணையை நின்றுநின் றெதிர்வன முதிர்வன
இளையோர்முன்

செருவை முண்டகஞ் சிறுவன வுறுவன
களவு வஞ்சகஞ் சுழல்வன வுழல்வன
தென்ன தெந்தனந் தெனதென தெனதெனஎனநாதம்
தெரிசு ரும்பைவென் றிடுவன அடுவன
மருள்செய் கண்கள்கொண் டணைவர்த முயிரது
திருகு கின்றமங் கையர்வச மழிதலை யொழிவேனே

மருவு தண்டைகிண் கிணிபரி புரமிவை
கலக லன்கலின் கலினென இருசரண்
மலர்கள் நொந்துநொந் தடியிட வடிவமு மிகவேருய்
வலிய சிங்கமுங் கரடியு முழுவையு
முறைசெ ழும்புனந் தினைவிளை யிதண்மிசை
மறவர் தங்கள்பெண் கொடிதனை யொருதிரு
வுளநாடி

அருகு சென்றடைந் தவள்சிறு பதயுக
சதத ளம்பணிந் ததிவித கலவியு
ளறம ருண்டுநெஞ் சவளுடன் மகிழ்வுட
னணைவோனே

அமரர் சங்கமுங் குடிபுக நொடியினில்
நிருதர் சங்கமும் பொடிபட அமர்செய்து
அருணை வந்துதென் திசைதனி லுறைதரு
பெருமாளே.

## பதவுரை

மருவு தண்டை=பொருந்திய தண்டையும், கிண்கிணி=கிண்கிணியும், பரிபுரம்=சிலம்பும், இவை கலகலன் கலின்கலின் என= இந்த அணிகலன்கள் கலகலன் கலின்கலின் என்று ஒலிக்கும்படி, இரு சரண் மலர்கள்=இரண்டு திருவடி மலர்களும், நொந்து நொந்து அடிஇட=மிகவும் வருந்தி நடக்க, வடிவமும் மிக வேறாய்=உருவமும் மிகவும் மாறி, வலிய சிங்கமும்=வலிமையான சிங்கமும், கரடியும்= கரடியும், உழுவையும்=புலியும், உறை செழும் தினைவிளைபுனம்= வசிக்கின்ற வளமையான தினைப்பயிர் விளைகின்ற புனத்தில், இதண் மிசை=பரண்மீது இருந்த, மறவர் தங்கள் பெண் கொடிதனை= வேடர்களின் குலக்கொடியாகிய வள்ளிநாயகியை, ஒரு திருஉளம் நாடி=ஒப்பற்ற திருவுள்ளத்தில் விரும்பி, அருகு சென்று அடைந்து= அப் பிராட்டியின் அருகில் சென்று சேர்ந்து, அவள் சிறுபதயுக சத தளம் பணிந்து=அந்த வள்ளியம்மையின் நூறு இதழ்த்தாமரை போன்ற இரு திருவடிகளை வணங்கி, அதிவித கலவியுள்=பலவித திருவிளையாடலில், நெஞ்சு அற மருண்டு=மனம் மிகவும் மருட்சியடைந்து, அவளுடன் மகிழ்வுடன் அணைவோனே=அவளை மகிழ்ச்சியுடன் தழுவியவரே! அமரர் சங்கமும் குடிபுக=தேவர்களின் கூட்டம் விண்ணுலகில் குடியேறவும், அசுரர் சங்கமும்=அசுரர்களின் கூட்டம், நொடியினில் பொடிபட=நொடிப் பொழுதில் பொடிபட்டழியவும், அமர் செய்து=போர் புரிந்து, அருணை வந்து= திருவண்ணமலையில் வந்து, தென் திசைதனில் உறைதரும்=தெற்குத் திசையில் வீற்றிருக்கும், பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! கருநிறம் செறிந்து= கரிய நிறத்தில் சிறந்தனவாய், அகல்வன=விசாலமாக வுள்ளனவாய், புகல்வன=பேசுவதுபோல் பொலிவு உள்ளனவாய், மதன தந்திரம் கடியன கொடியன=மதன சாத்திரத்தில் கூறிய கடுமையும் கொடுமையும் உடையனவாய், கனககுண்டலம் பொருவன வருவன=காதில் உள்ள பொன் குண்டலத்தோடு போர்செய்யவருவனபோல் காதளவும் நீண்டனவாய், பரிதாவும்=குதிரைமுகமுடைய வடவைத் தீ படர்ந்

துள்ளன, கடல் உடன்=கடல்போல, படர்ந்து அடர்வன தொடர்வன=நெருங்கி அடர்ந்து தொடர்கின்றனவாய், விளையும் நஞ்சு அணைந்து=அக்கடலில் தோன்றிய நஞ்சு கலந்து ஒளிசெய்து கொப்புளிப்பனவாய், கணையை நின்று நின்று எதிர்வன=அம்பையும் நின்று நின்று எதிர்ப்பனவாய், எதிர்வன=முற்றின தொழிலையுடையனவாய், இளையோர் முன்=இளைஞர்களின் முன்னிலையில், செருவை மூண்டு அகம் சிறுவன=போரை முயன்று தனக்குள்ளே கோபிப்பனவாய், உறுவன=கோபித்துத் தங்குவனவாய், களவு வஞ்சகம் சுழல்வன உழல்வன=களவுத்தனமும் வஞ்சனையும் கொண்டு சுழன்று திரிவனவாய், தெனன தெந்தனந் தெனதென தெனதென நாதம் தெரி=தெனன தெந்தனந் தெனதென தெனதென என்ற ஒலியை எழுப்புகின்ற, சுரும்பை வென்றிடுவன=வண்டை வெல்வனவாய், அடுவன=அவ்வண்டினை தன் அழகால் அடக்குவனவாய், மருள் செய்=மயக்கத்தைச் செய்வனவாயுள்ள, கண்கள் கொண்டு=கண்களைக் கொண்டு, அணைவர்தம் உயிர் திருகுகின்ற=தம்மைத் தழுவுபவர்களின் உயிரையுந் திருகிப் பறிக்கின்ற மங்கையர் வசம் அழிதலை ஒழிவேனே=பொது மாதர்களின் வசமாகி அழியுந்தன்மையை ஒழிக்கமாட்டேனே ?

## பொழிப்புரை

பொருந்திய தண்டை, கிண்கிணி சிலம்பு என்ற அணிகலன்கள், கலன்கலன் கலின்கலின் என்று ஒலிசெய்யும்படி இரு திருவடி மலர்கள் வருந்திட நடந்து, ஆறுமுகம் மாறுமுகமாக வேட்டுவ வடிவங்கொண்டு வலிமையான சிங்கம், கரடி, புலி என்ற விலங்குகள் வாழ்கின்ற செழுமையான திணைப்புனத்தில் பரண்மீது வாழ்ந்த வேடர்குலப் பாவையாகிய வள்ளிபிராட்டியை ஒப்பற்ற திருவுள்ளம் விரும்பி, அவளுடைய அருகில் சென்று, அவளுடைய சிறிய இரு பாத தாமரை மீது பணிந்து பலவகையான திருவிளையாடல்களில் மிகவும் உள்ளம் மருட்சி கொண்டு, அவரை மனமகிழ்ந்து தழுவிக்கொண்டவரே! தேவர்கூட்டம் தம் விண்ணுலகில் குடியேறவும், அசுரக் கூட்டம் ஒரு நொடியினில் மடிந்து அழியுமாறு போர் புரிந்து, திருவண்ணமலையில் தென்புறத்தில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! கருமை நிறத்துடன் விசாலமாகப் பேசுவதுபோல் விளங்குவனவாய், மன்மத நூலில் கூறப்பட்ட கடுமையுங் கொடுமையும் வாய்ந்தனவாய், காதில் உள்ள குண்டலம்வரை நீண்டு அதனுடன் போர் புரிய வருகின்றனவாய், குதிரைமுகமுடைய வடவைத் தீ பரந்துள்ள கடலைப்போல் பரந்து அடர்ந்து தொடர்கின்றனவாய், அக்கடலில் விளைந்த நஞ்சு கலந்து கொப்புளிப்பனவாய், அம்பை நின்று எதிர்ப்பனவாய், தொழில் முற்றினவாய், இளைஞரின் முன் போரை முயன்று

தனக்குள் எண்ணிச் சீறுகின்றனவாய், சீற்றம் தங்குகின்றன வாய், களவுத் தன்மையும் வஞ்சனையும் கொண்டு சுழன்று திரி கின்றனவாய், தெனன தெந்தன தெனதென தெனதென என்ற ஒலி செய்யும் வண்டினை கவன்று அதனை அடக்குவனவாய், காம மயக்கத்தைச் செய்வனவாயுள்ள கண்களைக் கொண்டு, தம்மை அணைகின்ற ஆடவர்களின் உயிரையுந் திருகிப் பறிக்கின்ற பொது மாதர்களின் வசமாகி அழிதலை அடியேன் ஒழிக்க மாட் டேனோ ?

## விரிவுரை

இத்திருப்புகழ், முதல் நான்கு அடிகள் விலை மகளிரின் கண்களை மிகவும் அழகாகவும் திறமாகவும் வர்ணிக்கின்றன.

அகல்வன, புகல்வன; கடியன, கொடியன; பொருவன, வரு வன; அடர்வன, தொடர்வன; ஒளிர்வன, மிளிர்வன; எதிர்வன, முதிர்வன; சிறுவன, உறுவன: சுழல்வன, உழல்வன என்ற பதங்கள் வழி யெதுகையாக அமைந்து அழகு செய்கின்றன.

**செருவை முண்டகஞ் சிறுவன :—**

செருவை மூண்டு அகம் சிறுவன. மூண்டு என்ற சொல் லும் சீறுவன என்ற சொல்லும் குறுகி நின்றன.

பின்னேயுள்ள மூன்று அடிகள் வள்ளி பிராட்டியிடம் முரு கன் செய்த கருணைத் திறத்தை விளக்குகின்றன.

**இருசரண் மலர்கள் நொந்து நொந்தடியிட :—**

வேதாகமங்கட்கும், இருடியர்க்கும் இமையவர்க்கும் எட் டாத எம்பிரானுடைய சரண மலர்கள், கல்லும், முள்ளும் நிறைந்த கானகத்தில் வருந்தி நடந்து சென்றன. இது பக்கு வப்பட்ட ஆன்மாக்களுக்கு முருகன் புரியும் கருணைத் திறமா கும்.

**வடிவமுமிக வேறாய் :—**

வள்ளியை ஆட்கொள்ள முருகன், ஆறுமுகம் மாறுமுக மாகி, சிவந்த மேனி கரிய மேனியாகி, வேடர்குலக் காளையாக வும், வளையல் செட்டியாகியும், வேங்கை மரமாகியும், முதிய தவ முனிவராகியும் நின்று அவரிடம் புரிந்த ஆடல்.

**அவள் சிறுபதயுக சததளம் பணிந்து :—**

வள்ளியை முருகன் பணிந்தான் என்று கூறும் இப்பகுதி, அடியவர்க்கு எளியனும் கருணைத் திறத்தைக் குறிக்கின்றது.

"பணியாவென வள்ளி பதம்பணியும்
தணியா அதிமோக தயாபரனே" —கந்தரநுபூதி

# கற்பு

## மணியம்மை

மணியம்மை தன் புதல்வியைப் பார்த்துக் கூறுகின்ருள், "அம்மா, குழந்தாய்! பெண்கள் தமது கற்புநெறியை மிகவும் போற்றிக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். ஆவதும் பெண்களால்தான்; அழிவதும் பெண்களால்தான். அழிவது என்ருல் குடும்பம் அழிவது என்று பொருளன்று. கணவனுக்கு வரும் இடர்கள் யாவும் அழிவதும் பெண்களால் என்று பொருள்படும்.

கற்புக்குப் பங்கம் வருமானுல் கணவஞர் வாழ்வு சீர்குலேந்து விடும். இதனே விளக்க ஓர் வரலாற்றைக் கூறுகின்றேன் கேள்.

வடக்கே உஜ்ஜைனி என்ற நகரத்தை விக்கிரமாதித்தனுடைய இளவல் பர்த்துருஹரி என்ற மன்னர் பெருமான் ஆட்சி புரிந்து வந்தார். அவருடைய ஆட்சி மாட்சியுடன் விளங்கியது. மக்கள் குறைவின்றி நிறைவுபெற்று வாழ்ந்தார்கள். காலத்தில் மழை பொழிந்தது. உணவுப் பண்டங்கள் மலிந்து இருந்தன. பசுக்கள் நிரம்பப் பால் சுரந்தன. அவருடைய ஆட்சியில் நோயின்மையால் மருந்துக்கும் மருத்துவர்கட்கும் வேலேயில்லாமல் போய்விட்டது

---

அமரர் சங்கமும் குடிபுக :—

சூரபன்மனுடைய புதல்வன் பானுகோபன். இந்திரனுடைய புதல்வன் ஜயந்தனேயும், தேவர்களேயும் தேவ மாதர்களேயும் சிறைசெய்து, இந்திரனுடைய தலேநகரமாகிய அமராவதி நகரை தீக்கு இரையாக்கினுன்.

முருகப் பெருமான் சூராதியவுணர்களே யழித்து தேவர்களேச் சிறைமீட்டு, இந்திரவுலகைப் புதுப்பித்து, அமரர்களேத் தங்கள் நகரில் பண்டுபோல் சுகித்து வாழக் குடியேற்றி யருள் புரிந்தார்.

அருணேவந்து தென்திசைதனி லுறைதரு :—

திருவண்ணுமலேயில் தெற்கு வீதியில் உள்ள குமரர் கோயில் என்ற ஆலயத்துக்குரியது இத்திருப்புகழ்.

### கருத்துரை

அருணேமேவும் அண்ணலே! மாதர் வசமுருது அடியேனே ஆண்டருள்வாய்

கள்ளர்கள் இல்லாமையால் பூட்டுக்கும் காவலர்கட்கும் மதிப்பு இல்லாமல் போய்விட்டது. காட்டில் விலங்குகள் சாந்தமாக வுலாவின. மக்கள் நாட்டில் அச்சம் இன்றி உறங்கினர்கள்.

பர்த்துருஹரி குடிகளைத் தாய்போல் பரிந்து ஆதரித்து வந்தார். வயல்கள் நிரம்ப விளைந்தன. காலமில்லாமலும் மரங்கள் பழுத்தன. எங்கும் அமைதி நிலவியது. அமைச்சர்கள்—ஏனைய அரசாங்க அலுவலர்கள் தத்தம் கடமைகளை நன்கு விழிப்புடன் செய்து வந்தார்கள். அவருடைய ஆட்சியில் அதிவிருஷ்டி, அநாவிருஷ்டி, புயல் முதலிய இடர்கள் உண்டாகவில்லை. மன்னர் கருணைக் கடலாய், காட்சிக்கு இனியராய், காண்டற்கு எளியராய், கல்விக் கடலின் கரை கண்டவராய், ஏழை பங்காளராய், இன்சொல்லும், ஈரநெஞ்சும் உடையவராய் விளங்கினர்.

மன்னர் பெருமானுடைய மனைவி மகாராணி பேரழகுடையவள். மெருகிட்ட தங்கச்சிலை போல் காட்சி தந்தாள். தேன்மொழியும், மான்விழியும், அன்னநடையும், மின்னலிடையும் உடையவளாய் எழிலின் சிகரமாக விளங்கினள். இதனல் மன்னர் அவள்மீது தன் உயிரை வைத்திருந்தார். அவளை அளவுக்கு மீறி காதலித்து மகிழ்ந்தார். அவளைக் காணுந்தொறும் காணுந்தோறும் கண்கள் இமைப்பதை மறந்துவிடும். இந்திரனைப் போல் தனக்கு ஆயிரங் கண்கள் இல்லையே என்றும், அவளைத் தழுவ வருணனைப்போல் ஈராயிரங் கரங்கள் இல்லையே என்றும் எண்ணி ஏங்குவார். அவளை மனைவியாகப் பெற்றதனல் தன்னைப் பரம பாக்கியசாலியாக நினைந்து நெஞ்சம் மகிழ்வார். உள்ளம் நெகிழ்வார். அவளுடன் உரையாடுவதில் பல மணி நேரம் சில விநாடிபோல் அவருக்குக் கழியும். அவள்பால் நெருங்குங்கால் குளிர்ச்சியாக இருக்கும். நீங்குங்கால் நெருப்பாகச் சுடும். பொதுவாக நெருப்பு நெருங்கில் சுடும். நீங்கில் சுடாது. இவள்பால் உள்ள ஆசைக்கனல் நீங்கினல் சுடுகின்றது. நெருங்கினல் குளிர்கின்றது. இப்படிப்பட்ட புதுமையான கனலை இவள் எங்கு பெற்ருளோ? என்று எண்ணுவார்.

நீங்கில் தெறூஉம், குறுகுங்கால் தண்ணென்னும்
தியாண்டுப் பெற்ருள் இவள். —திருக்குறள்.

ஒருநாள் மன்னர் வேட்டைக்குப் புறப்பட்டார். தன் காதலியிடம் பிரியா விடை பெற்ருர். வேடர் வில்லியர் புடைசூழ வேட்டைக் காட்டகஞ் சென்ருர். வேட்டையாடும் போதெல்லாம் மகாராணியையே நினைந்து நினைந்து உருகினர். மாலைநேரம் வந்தது. நீர் விடாயால் களைத்துப்போனர். அங்கு ஒரு சோலை. அதன் நடுவில் ஒரு தாமரைத் தடாகம். அதில் கைகால் முகம் கழுவி நீர் பருகினர். அங்கு மாமரத்தடியில் ஒரு மாமுனிவர் அமர்ந்து தவஞ்செய்துகொண்டிருந்தார். தவமுனிவரைக் கண்ட வேந்தர் அவருடைய திருவடியில்

அடியற்ற மரம்போல் வீழ்ந்து வணங்கினர். அவர் திருமுன் நெடு நேரம் நின்ருர். நீண்ட நேரத்திற்குப் பின் அவர் கண்மலர் விழித்தார். காவலனைப் பார்த்தார். புன்முறுவல் பூத்தார். முனீந்திரருடைய அருட்பார்வை நரேந்திரர் மீது பட்டது.

ஒரு இனிய பருத்த மாங்கனியை எடுத்து மந்திரித்து மன்னவரிடம் தந்தார். "அப்பனே! இது கிடைத்தற்கரிய கனி: இதனை நீ உண்பாயாக. நோயின்றி வாழ்வாய். இனி உனக்கு நலம் விளையும்" என்ருர். பிறகு அவர் கண்களை மூடிக்கொண்டார்.

பர்த்துருஹரி மாங்கனியைப் பெற்று மனமிக மகிழ்ந்தார். அக்கனியை அவர் உண்டாரில்லை. ஆ! ஆ! இக்கனி காண்பதற்கே இனிமையாக இருக்கின்றதே. இதன் சுவை எத்தன்மைத்தோ? இந்த உயர்ந்த கனியை நாம் உண்பதைவிட நம் அன்பு மனைவி யுண்பது நலம். இதனுல் விளையும் நலத்தை அவள் அடையட்டும். உயிரினும் இனிய அந்த உத்தமிக்கே இது உரியது என்று எண்ணினர்.

கனியை எடுத்தக்கொண்டு புறப்பட்டார். இரவு தன் நகரை யடைந்தார். அரண்மனையைச் சேர்ந்தார். உணவை யுண்டு, பள்ளியறைக்குள் நுழைந்தார். அங்கு தந்தக் கட்டிலில் மயில்போல் மனைவி யுறங்கிக் கொண்டிருந்தாள். அவளுடைய கரிய பெரிய கூந்தலை வருடினர். அவள் விழித்து எழுந்தாள். கணவனைக் கண்டு துள்ளி அவரைத் தழுவிக் கொண்டாள்.

இப்பொழுதுதான் வந்தீரா? அயர்ச்சியினுல் சிறிது உறங்கி விட்டேன். உங்கள் பிரிவினுல் அழலிடைப்பட்ட புழுவைப்போல் என் உள்ளம் வெதும்பித் துடித்தது. உலகம் போற்றும் உத்தம வேந்தரை நான் கணவராகப் பெற்றேன். என்னினும் சிறந்த பேறு பெற்ருர் யார்? உங்கள் புன்னகை, ஒரு கோடி பொன் பெறுமே. உங்கள் அன்பு என்பையும் உருக்கும். உங்கள் பெருமை பொன்மேரு கிரியினும் உயர்ந்தது'' என்ருள்.

பர்த்துருஹரி, மனைவியின் பரிந்துரைகளைக் கேட்டுப் பரவச மடைந்தார். சிந்தையும் செவியும் குளிர்ந்தன. மாங்கனியை எடுத்து மனைவியிடம் தந்தார். என் அன்புக் குவியலே! அரும்பெருந் திருவே! பெறலருந்தருவே! பெண்ணுரமுதமே! விண்ணுர் மதியமே! இன்று கானகத்தில் ஒரு சிறந்த தவமுனிவர் இக்கனியை என்பால் அன்பால் தந்தருளினர், இது தெய்வீகமான மாங்கனி இதனை யுண்பார் நோயின்றி வாழ்வார்கள். குறைவில்லாத நிறைவைத் தரும் அற்புதக்கனி இது. இதனை என்னை உண்ணுமாறு உவந்து தந்தார். என்னிலும் நீ இனியவள். நீ பெண்குலந் தழைக்கவந்த பெருங்கனி. இந்த அருங்கனி உனக்கே உரியது. ஆதலால் காதலால் உனக்கு இதனைத் தந்தேன். நீ உண்டு உவப்பாயாக'' என்ருர்.

மகாராணி "பூதலம் போற்றுங் காதலரசே! தாங்கள் இத்துணை அன்பால் என்னை அரவணைக்கின்றீரே. ஆ! ஆ! நான் என்ன புண்ணியம் செய்தேனே? என்னினும் பாக்கியசாலிகள் யாருளர்? இதனைத் தாங்கள்தான் உண்ணுதல் வேண்டும். நான் நோயின்றி இருந்து பயன் யாது? தாங்கள் உலகைப் புரக்கும் உத்தம வேந்தர். தாங்கள் சுகமே யிருந்தால் உலகமும் மக்களும் சுகப்படுவார்கள். ஆதலால் என் வேண்டுகோளைப் புறக்கணிக்காது தாங்கள் இதனைத் தயவு செய்து சாப்பிடுங்கள்" என்று கெஞ்சினள்! மிகவும் கொஞ்சினள்.

மன்னவர் "என் மனத்துக்கிசைந்த மணிவிளக்கே! இதனை நீதான் உண்ணவேண்டும். நீ சுகமே வாழ்வதை நான் பெரிதும் விரும்புகின்றேன். நீ என் சொல்லைத் தட்டாதே. நீயே என் உயிர். நீயே என் செல்வம். அன்பும் ஆர்வமும் இன்பமும் பிற எல்லாம் நீதான்" என்று கூறி கனியை அவளிடம் வற்புறுத்திக் கொடுத்தார்.

மகாராணி, "தங்கள் திருவுளம் அதுவாயின் நானே உண்ணுவேன். நாளை காலை நீராடி தூய்மையாக உண்டு நலம் பெறுவேன்" என்றாள். பர்த்துருஹரி அவளுடன் இன்ப வுரையாடி, பொன் மயமான பள்ளியில் படுத்தார். வேட்டையாடியதால் உடம்பில் அசதி படுக்கையும் வசதி. அசதி வசதி இரண்டும் ஒன்றுபட நன்கு உறங்கி விட்டார்.

பெரும் பொருள் படைத்தவர்களின் இல்லத்தில் பெரும்பாலும் ஆண்கள்தான் முன்னே துயில் விட்டு எழுவார்கள். அதிகாலையில் மன்னர் பெருமான் எழுந்தார். மகாராணி ஆழ்ந்த நித்திரை புரிந்து கொண்டிருந்தாள்.

மன்னர் மூன்றாவது அடுக்கு மேல்மாடியில் வடக்கு நோக்கி நின்று, வேலங்குச்சியினால் பல் விளக்கிக் கொண்டிருந்தார். கீழே. நோக்கினார். ஒரு காட்சியைக் கண்டு திடுக்கிட்டார். அரண்மனையில் மலம் அள்ளி எடுத்துக்கொண்டு போகும் ஒரு பெண்ணின் மலக் கூடைமீது ஒரு இலைமேல் மாதவர் தந்த மாங்கனி யிருந்தது. இதனைக் கண்ட மன்னருடைய மனம் பதறியது. இக்கனி பெறுதற்கரியது. இதனை நான் மாதவத்தால் மாதவரிடம் பெற்றேன். இரவு 11 மணிக்கு என் காதற்கனியிடம் தந்தேன். இது இவள்பால் எப்படி வந்தது? இவள் திருடினாளோ? அரண்மனையில் வேறு யாராவது திருடி இவள்பால் தந்தார்களோ? இதனை அறிந்து தக்க தண்டனை தருதல் வேண்டும்" என்று கருதினார். அவருடைய கண்கள் சிவந்தன. புருவங்கள் குதித்தன. கோபக்கனல் மூண்டது. கீழே இறங்கி தோட்டத்தின் பக்கம் வந்தார். மலக்கூடை சுமப்பவளை அழைத்தார்.

"இக்கனி உனக்கு எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டார்.

அவள் ஆடாமல் அசையாமல் பதருமல், மன்னவரை வணங்கி, "அரசர் பெருமானே! அரண்மனைக் காவல்காரனுக்கும் எனக்குஞ் சில காலமாக நட்புண்டு. அவன் என்பால் இதனைத் தந்தான்" என்ருள்.

அரசர் அவளை ஒரு அறையில் அடைக்கச் செய்து, காவல்காரனை யழைத்து, இக்கனி உனக்கு எப்படிக் கிடைத்தது? என்று கேட்டார்.

காவல்காரன் சிறிதுந் தடுமாற்றம் இன்றி, "வேந்தர் திலகமே! அரண்மனையை கூட்டிப் பெருக்கும் குப்பு எனக்குத் தொடர்புடையவள். அவள் தந்தாள்" என்ருன்.

மன்னர் அவனை வேறு அறையில் அடைக்கச் சொல்லி, குப்புவை யழைத்து, "இக்கனி உனக்கு ஏது?" என்று கேட்டார்

அவள் சிறிது நாணிக்கோணி, "எஜமான்! குதிரைப்பாகர் இருக்கின்ருரே! அவருக்கு என்மீது நேசம். அந்த ஐயாதான் தந்தாருங்க," என்ருள்.

அரசர் அவளை ஒரு அறையில் அடைக்கச் செய்து, குதிரைப் பாகனை அழைத்து, "இக்கனி உனக்கு ஏது?" என்று வினவினர்.

குதிரைப்பாகன், "கொற்றவரே! யானை மாவுத்தன் மனைவிக்கும் எனக்கும் நட்புண்டு அவள் இதனை எனக்கு ஈந்தாள்" என்ருன்.

யானை மாவுத்தன் மனைவியை யழைத்து "இப்பழம் உனக்கு எவ்வாறுகிடைத்தது?" என்ருர்.

அவள் "அரசரே! நம்ம அரண்மனைச் சமையல் பரிசாரகரய்யா தந்தாருங்க" என்ருள்.

அவளை அரசர் வேறு தனியறையில் அடைக்கச் செய்து, சமையல் பரிசாரகனை விளித்து, "இக்கனி உனக்கு ஏது?" என்று கேட்டார்.

பரிசாரகன் நடுங்கினன் ஒடுங்கினன். அரசர் கால்மீது வீழ்ந்தான். "வேந்தர்பெருமானே! என்மீது கோபிக்க வேண்டாம். மகாராணிக்கு என்மீது எல்லையற்ற பிரியம் அவர்கள்தான் என்னை தன் உயிராக நேசிக்கின்ருர்கள். ஆதலால் மகாராணி எனக்கு இதனை ஈந்தார்கள்" என்ருன்.

இதனைக் கேட்ட பர்த்துருஹரி நெடுமரம்போல் சிறிது நேரம் அசைவற்று நின்ருர். தனக்குள்ளே சிந்தித்தார். நான் மூடன். காமாந்தகாரத்தால் அறிவுக் கண்களை யிழந்தேன். ஆ! ஆ! நான் இரவு 11 மணிக்கு இந்த அரிய கனியை மனைவியிடம் தந்தேன். அவள் பரிசாரகனிடம் தர, பரிசாரகன், மாவுத்தன் மனைவிக்குத் தர, அவள், குதிரைப்பாகனிடம் தர, அவன் குப்புவிடம் கொடுக்க, குப்பு, காவல்

காரனிடம் தர, அவன் மலம் எடுப்பாளிடம் தந்தான். இதுவா உலகம்? இந்த உலகத்தைத் திருத்த நம்மால் ஆகாது. நாம் உலகத்தை விட்டுவிட வேண்டும். மனைவியையோ மற்றவர்களையோ நாம் தண்டிப்பதும் கண்டிப்பதுங் கூடாது. தண்டிப்பதும் கண்டிப்பதும் இறைவனுடைய வேலை. இனி நாம் இந்த வுலகில் உறவு வைக்கக்கூடாது. இரவு மனைவி என்னிடம் பேசிய பேச்சில்தான் எத்தனை மாயாஜாலம் அம்மம்மா! இந்த வுலகம் இப்படித்தான் இருக்கும். மலை மழையில் நனைகின்றதே என்று வருந்தி மலைக்கு மழைக்கோட்டுத் தைத்துப் போடுவது சாத்தியமா? அது அறிவுடைமையாகுமா? நாம் மழைக்கு அஞ்சி ஒதுங்கவேண்டும். சீ! சீ! இது பொய் உலகம். இந்திர ஜால வாழ்வு. இத்தனை காலம் அவல வாழ்வில் நின்றேன். இன்றே பொறி புலன்களை வென்றேன். இனி ஒரு கணமும் இங்கு இருத்தல் கூடாது. ஏ மனமே! நீ உண்மையை யுணர். இனி மயங்காதே. வாழ்வில் தியங்காதே, மாயவாழ்வில் மருளாதே. அறிவு என்னும் வாளினால் ஆசாபாசத்தின் வேரை யறுத்துத் தள்ளுவாயாக" என்று கூறினார்.

உடுத்த உடையை அவிழ்த்து வீசினார். கோவணத்துடன் அரண்மனையை விட்டுப் புறப்பட்டார். கால் சென்ற வழியே நடந்தார். ஞானநெறியைத் தொடர்ந்தார். அவருடைய உள்ளத்தில் ஒரு சிறிதும் பற்று இல்லை. தூய துறவியாகத் திரிந்தார். இந்த ராஜரிஷி மூன்று நூல்களைப் பாடினார். சிருங்கார சதகம், வைராக்கிய சதகம், நீதிமஞ்சரி என்ற நூல்கள் அவை. முனியரசராக நின்று, பொறி புலன்களை வென்று, பரம்பொருளுடன் ஒன்றினார் என்று இந்த வரலாற்றைக் கூறி முடித்தாள் மணியம்மை.

---

மெய்ப்பொருளா நின்னை விரும்பியின்ப மேவாது
பொய்ப்பொருளை நாடியிடர்ப் போந்தேனைச்—செப்பரிய
மட்டழ கார்சோலை மலிந்ததிருப் போரூரிற்
கட்டழகா காத்தல் கடன்.

இடர்களையு மின்பக் கரும்பை யெமது
தொடர்பிறவி நீக்குந் துணையைத்—தொடர்பாகி
உள்ளும் புறம்பும் ஒளிவீசும் போரூரிற்
றெள்ளுமணியை நெஞ்சே சேர்.

—திருப்போரூர்ச்சந்நிதிமுறை (மாலை)

# மகாபாரதம்

## சாந்தி பர்வம்

### மோக்ஷ தர்மம்

(17-ம் பக்கத் தொடர்ச்சி)

### விஷ்ணு மகிமை

"உலகமெல்லாம் திருமாலினிடமிருந்து தோன்றி மீண்டும் அவரிடத்தில் ஒடுங்குகின்றன. அவரே படைக்கின்ருர்; அவரே காக்கின்ருர்; அவரே ஒடுக்குகின்ருர். அவர் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதவர். அன்பு ஒன்றுக்கு மட்டும் எட்டுபவர். அவருக்குத் திசைகளே கரங்கள்; ஆகாயம் சுரோத்திரம்; சூரியன் நேத்திரம், சந்திரன் மனம்; அவரே எல்லாமானவர். அவருடைய மூச்சுக் காற்று மந்திரங்கள். அநேக முகங்களையுடையவர்; தவம் ஞானம் உண்மை மந்திரம் பிராம்மணம் பிரமன் உருத்திரர் இந்திரன் அசுவிநீ தேவர்கள் வருணன் யமன் குபேரன் எல்லாம் அவரேதான். உலகம் யாவும் அவருடைய வசத்தில் இருக்கின்றன. மாறிமாறிப் பிறந்த உயிர்கள்; நல்வினைப் பயனுல் பரவித்தையைப் பெற்று விஷ்ணுபதம் அடைகின்றன" என்று கூறினுர். விருத்திராசுரன், தன் மனத்தை விஷ்ணுவின் திருவடியில் சேர்த்துப் பரமபதமடைந்தான்.

யுதிஷ்டிரர் "சிறந்தவரே! மிக வுயர்ந்தவனுகிய விருத்திராசுரனை இந்திரன் எவ்வாறு வதை செய்தான். அதை எனக்குச் சொல்லும்" என்ருர்.

### விருத்திராசுர யுத்தம்

பீஷ்மர் "விருத்திராசுரன் எண்ணில்லாத தவஞ்செய்து மூவுலகங்களையும் பெற்ருன். அவன் 60 ஆயிரம் ஆண்டு தவஞ் செய்தான் இந்திரன் முதலிய இமையவரை வென்ருன். வெகுகாலம் ஆட்சி செய்தான்.

இந்திரன் தேரேறி அவனுடன் போர் புரியச் சென்ருன். விருத்திரன் முன் நின்ருன். அப்போழுது ஐந்நூறு யோசனை அளவு உயரமும் எண்ணூறு யோசனை அகலமும் உடையவனுக நின்ருன். அவன் பேருருவத்தைக் கண்டு அமரர்கள் நடுங்கினுர்கள். இந்திரன் அஞ்சினுன். பிறகு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு வாள் சூலம் தண்டு இருப்புலக்கைகள் முதலிய ஆயுதங்களைக் கொண்டு

போர் புரிந்தான். விருத்திரன் சிரித்துக்கொண்டே போர் செய்தான். இந்திர விருத்திர யுத்தத்தால் உலகங்கள் நடுங்கின. பிரமதேவர் கந்தர்வர்கள் அரம்பையர்கள் முதலியோர் விமானங்களில் இருந்து இந்தப் போரைப் பார்த்தார்கள். விருத்திரன் பல மாயங்களைச் செய்து போர் புரிந்து இந்திரனை மயங்கச் செய்தான்.

மயங்கிய இந்திரனை வசிட்டர் ரதந்தரம் என்ற மந்திரத்தால் தேற்றினர். "இந்திரனே! மயங்கற்க. வீரத்துடன் போர் புரிந்து அசுரர்களை வதைப்பாயாக. இதோ பிரமாவும் திருமாலும் மகா தேவரும் மகாமுனிவர்களும் உனக்கு வெற்றியுண்டாக வேண்டும் என்று "ஸ்வஸ்தி" கூறுகின்றனர்கள். சோர்வை யுதறித் தள்ளிவிட்டு ஊக்கத்துடன் போர் புரிந்து வெற்றி பெறுவாய். முக்கண்ணராகிய சிவபெருமான் உன்னைப் பார்த்து அருள் புரிகின்றார்" என்று கூறினர்.

வசிட்டருடைய உபதேசத்தாலும் மந்திர சக்தியாலும் இந்திரன் வலிமை பெற்றான். விருத்திரனுடைய மாயையை விலக்கினன்.

பரமேச்வரருடைய ஒளியானது ஜ்வரமாக ஆகி விருத்திரனை யடைந்தது. நாராயணர் இந்திரனுடைய வஜ்ராயுதத்தில் சேர்ந் தார். வியாழ பகவான் முதலிய முனிவர்கள் இந்திரனை வாழ்த் தினர்கள். பிரமதேவரும் அருள் புரிந்தார். உருத்திர மூர்த்தியிட மிருந்து புறப்பட்டு அவனை யடைந்த ஜ்வரத்தால் அவன் உடம்பு நடுங்கியது; மேல்மூச்சு உண்டாயிற்று; நிறம் குன்றியது; பலப்பல தீய சகுனங்கள், அவனுக்கு உண்டாயின. எரிகொள்ளிகள் விழுந்தன.

இந்திரன் வஜ்ராயுதத்தை ஏந்திக்கொண்டு அவனை எதிர்த்தான். விருத்திரன் ஜ்வர வேகத்தால் கொட்டாவி விட்டான். அப்போது இந்திரன் வஜ்ராயுதத்தை ஏவினன், அது அவன் வாயில் புகுந்து அவ னுடைய பருத்த உடம்பைப் பிளந்தது; விருத்திரன் மாய்ந்தான். தேவர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் புரிந்தார்கள்.

விருத்திரனுடைய உடம்பிலிருந்து ஒரு பயங்கரமான பிரமஹத்தி வெளிப்பட்டது. தெற்றிப் பற்களும், பரட்டைத் தலையும் நெருப்பை யுமிழ்கின்ற கண்களும், கபால மாலையும் உதிரத்தால் நனைந்த கரிய கோர வடிவமும் உடையதாய் அது இருந்தது. உலகம் அஞ்சுமாறு இந்திரனை அது தேடிற்று: இந்திரனுடைய கழுத்தைப் பிடித்துக் கொண்டது. இந்திரன் எங்கு ஓடினாலும் அங்கு அவனைத் தொடர்ந் தது. முடிவில் தாமரைத் தண்டின் நடுவில் ஒளிந்து பல ஆண்டுகள் வசித்தான். பிரமதேவரை யடைந்து வணங்கி முறையிட்டான்.

பிரமதேவர் அந்த பிரமஹத்தியை நான்காகப் பங்கிட்டார். ஒரு பங்கை தண்ணீரில் வைத்தார். தண்ணீரில் கோழையை யுமிழ்

கின்றவர்களையும் தண்ணீரில் மலசலங் கழிப்பவரையும் இது சார்க என்றார். மற்றொரு பங்கை செடி கொடி மரங்களில் வைத்தார். அகாலத்தில் செடி கொடி மரங்களை வெட்டுபவரையும் இது சார்க என்றார். மற்றொரு பங்கை நெருப்பில் வைத்தார். வேள்வி ஒரு போதும் செய்யாதவர்பால் சார்க என்றார். மற்றொரு பங்கை பெண்களிடம் வைத்தார். மாதவிடாய் காலத்தில் அவர்களை மருவுகின்றவர்பால் சார்க என்றார். பிரமஹத்தி நீங்கி இந்திரன் சுகமடைந்தான். குந்திநந்தன! நீ இந்திரனைப்போல் இன்புற்று வாழ்வாய். இந்த இந்திர விஜயத்தைப் படிப்பவர் இனிது வாழ்வார்" என்றார்.

## ஜ்வரம்

யுதிஷ்டிரர், "சிவபெருமானிடமிருந்து தோன்றிய ஜ்வரத்தைப் பற்றி விவரமாக அறிய விரும்புகின்றேன்" என்றார்.

பீஷ்மர் "வேந்தனே! பொன் மயமானதும் அளவிடமுடியாததுமான மேருகிரியில் சிறந்த மணித்தவிசில் சிவபெருமான் வீற்றிருந்தார்: இடப்பாகத்தில் எல்லா வுலகங்கட்கும் அன்னையாகிய அம்பிகை அமர்ந்திருந்தார் அமரர்களும், அச்வினி தேவர்களும், வசுக்களும், குபேரனும், மகாகவியாகிய சுக்கிரனும், சநத்குமாரர், அங்கிரசு முதலிய முனி கணங்களும் சிவபெருமானைத் துதி செய்து கொண்டு உபாசித்துக் கொண்டிருந்தார்கள். நாரத பர்வதர்கள் பாடிக் கொண்டிருந்தார்கள். பூதகணங்கள் படைக்கலங்களை யேந்தி நின்று கொண்டிருந்தன. நந்திதேவர் பொற்பிரம்பு தாங்கி சந்நிதிக்கு முன் நின்றிருந்தார்.

தட்சன் என்ற பிரஜாபதி சிவபெருமானைப் புறக்கணித்து வேள்வி செய்தான். அவ்வேள்விக்கு எல்லா அமரர்களையும் அழைத்தான். மாலயனாதி வானவர்கள் தத்தம் வாகனங்களில் சென்றார்கள். இதனைக் கண்ட பார்வதி தேவியைத் தட்சன் அவமதித்தான். அதனால் அன்னை சிவபெருமானிடம் வேண்டினாள். அம்பிகையின் விருப்பப்படி சிவபெருமான் சிறிது சீற்றமடைந்தார். அவருடைய நெற்றியிலிருந்து ஒரு வேர்வைத் துளி வெளிப்பட்டது. அந்த வேர்வைத் திவலை பூமியில் விழுந்தவுடன் காலாக்கினிக்கு நிகரான பெரிய அக்கினி யுண்டாயிற்று. அதனால் உலகமெல்லாம் நடுங்கின. அதன் வெப்பத்தை யாற்றாது எல்லா வுயிர்களும் துடித்தன. பிரமதேவர் அங்கு வந்து சிவபெருமானை வணங்கித் துதி செய்து, "தேவ தேவ! உமது கோபத்தீயை அடக்கி யருள்புரிய வேண்டும். உமது வேர்வையிலிருந்து உண்டான ஜ்வரம் என்ற பேருள்ள இப்புருஷனால் உலகம் அழியும்" என்று வேண்டிக்கொண்டார்.

சிவபெருமான் கருணைபூத்து, அந்த ஜ்வரத்தைப் பல பிரிவு களாகப் பிரித்தார், அது—யானைகளுக்கு மண்டைக்கொதிப்பாகவும் மலைகளுக்குத் தாதுவாகவும், நீருக்குப் பாசியாகவும் பாம்புகளுக்குச் சட்டையாகவும், எருதுகளுக்குக் குளம்பு ரோகமாகவும், பூதலத்தில் உவராகவும், பசுக்களுக்கு மாலைக் கண்ணாகவும், குதிரைகளுக்குக் கண்டத்தில் சதையடைப்பாகவும், மயில்களுக்கு மண்டை வெடிப் யாகவும், குயில்களுக்குக் கண்ணோயாகவும், செம்மறியாடுகளுக்குப் பித்த விகாரமாகவும், பிரிந்து சென்றன. மனிதர்களிடம் ஜ்வரம் என்றே அமைந்தது. இந்த ஜ்வர உற்பத்தியைப் படிப்பவன் சோக ரோகத்திலிருந்து விடுபடுவான் என்றார்.

## தட்சயக்ஞமும் வீரபத்திரரும்

தட்சன் கங்காத்துவாரத்தில் யாகத்தைத் தொடங்கினான். அந்த யாகத்தில் தேவர்கள் யட்சர்கள் அசுரர்கள் சித்தர்கள் முதலிய அனை வரும் கூடியிருந்தார்கள். தட்சன் சிவபெருமானை அழைத்தானில்லை. அப்போது ததீசி முனிவர் தட்சனிடம் வந்து, "சிவபெருமான் இல்லாத இது யாகமாகாது, அறமுமாகாது; சகல வேதங்களுக்கும் சகல வுலகங்களுக்கும் பரமேசுவரர் ஒருவரே பதி. சிவபிரானை ஆராதிக்காதவர்கள் அழிவார்கள். தட்சனே! உனக்கு அழிவுகாலம் வந்திருக்கின்றது. விரைவில் அழியப் போகின்றாய்" என்று வெகுண்டு கூறினார். அவர் கூறிய சிவபரத்துவங்களைக் கேட்டுத் தட்சன் திருந்தினானில்லை.

தட்சன், நாராயணர் பிரமன் இந்திரன் முதலிய இமையவர்களை அங்கு மதித்து, அவர்கட்கு யக்ஞ பாகங்களைக் கொடுத்தான். அங்கு எழுந்தருளிய உமாதேவியாரை அலட்சியஞ் செய்தான். சிவநிந்தை செய்தான். அதனால் சிற்றமடைந்த உமாதேவியார் திருக்கயிலை சென்று "பெருமானே! உம்மை நிந்தித்த தட்சனுடைய யாகத்தை அழித்தருளுவீராக" என்று வேண்டிக்கொண்டார். சிவபெருமா னுடைய திருமுகத்திலிருந்து அகோர வீரபத்திரர் அவதரித்தார். உமாமகேச்வரியின் திருமுகத்திலிருந்து பத்ரகாளி தோன்றினாள்.

வீரபத்திரர் மகாகாளியுடன் தட்ச யக்ஞத்தை யழிக்கும் பொருட்டுப் புறப்பட்டார். அவருடைய உரோமங்களிலிருந்து பல்லாயிரம் வீரர்கள் தோன்றினார்கள். உலகங்கள் நடுங்க நடந்து கங்காத்துவாரத்தை யடைந்தார்கள். அவர்களைக் கண்டு அமரர்கள் நடுங்கினார்கள். மலைகள் சிதறின; கடல் கலங்கிற்று; நிலம் அசைந் தது. கதிரும் மதியும் ஒளி செய்யவில்லை. சிவகணங்கள் யாகப் பொருள்களை வாரி வாரி இறைத்தன. அங்கு குவிந்திருந்த பட்சணங் களை வாரி யுண்டார்கள். தேவர்களை அடித்துத் தண்டித்தார்கள். சூரியனுடைய பல்லை வீரபத்திரர் உடைத்தார். சந்திரனைக் காலால்

தேய்த்தார். தேவ மாதர்களின் அங்கங்களை அறுத்தார். தட்சன் வீரபத்திரரால் பெரிய வேதனைப்பட்டான். யாகம் அழிந்தது. மால யனுதி வானவர்கள் தண்டிக்கப்பட்டார்கள்.

தட்சன் தன் அறியாமைக்கு வருந்திஞன்; உள்ளம் திருந்திஞன். சிவபெருமானுடைய திருவடியில் வீழ்ந்தான். ஆலகாலமுண்ட நீல கண்டரே! என்னைப் பொறுத்தருளும்" என்று வேண்டிஞன். ஆயிரத் தெட்டு நாமங்களைக் கூறித் துதி செய்தான்.

"முக்கண்ணரே! போற்றி, எங்கும் கண்களையுடையவரே! எங்கும் செவிகள் உள்ளவரே! பசுபதியே! பரம் பொருளே! வேதங்களுக்கு எட்டாதவரே! அழிவற்றவரே! போற்றி! முப்புர மெரித்த மூல காரணரே! காலகாலரே! போற்றி! மூவர்க்குந் தேவர்க்கும் முதல் வரே போற்றி!" என்று இன்னேரன்ன சிவமகிமைகளைக் கூறிப் பணிந்தான். வினை தணிந்தான். சிவபாதத்தைச் சென்னியில் அணிந்தான். சிவபெருமான் அவனுக்குக் கருணை செய்தார். நீ அநேக யாக பயன்களைப் பெறுவாயாக. பாசுபத விரதப் பயனையும் நீ பெறுக" என்று அருளி மறைந்தார்.

தட்சனுல் துதிக்கப் பெற்ற இந்தத் துதியைப் படிப்பவனும் கேட்பவனும் எல்லா நலங்களையும் பெறுவான். பொன் பொருள் முதலிய நலங்களை யடைவர். இதனை யோதுபவர் பாவங்களிலிருந்து விடுபடுவர் சிவபதம் பெறுவர். இதனை யோதுகின்றவர்களின் குலம் நலம் பெறும். நோயாலும் பேயாலும் துன்பமடையார்கள், இகபர நலன்களை எளிதிற் பெறுவர். இது மிகச் சிறந்த துதியாகும்" என்று கூறினுர்.

## துக்கம் முதலியன தொடராமலிருக்க வழி

யுதிஷ்டிரர், "பிதாமகரே! உயிர்கள் துன்பத்தைக் குறித்தும் மரணத்தைக் குறித்தும் நடுங்குகின்றன. இந்த இரண்டும் எங்களுக்கு உண்டாகாமல் இருக்க என்ன வழி? கூறும்" என்று கேட்டார். பீஷ்மர் கூறுகின்ருர்.

"சாத்திரங்களின் கரைகளைக்கண்டவராகிய நாரத முனிவர் ஒரு சமயம் ஸமங்கர் என்ற முனிவரைச் சந்தித்தார். "சமங்கரே! நீர் எப்பொழுதும் மகிழ்ச்சியாகவே இருக்கின்றீர், உம்மிடம் பயமோ துன்பமோ ஒரு சிறிதும் காணப்படவில்லை. நித்தியத் திருப்தியுடைய வராக விளங்குகின்றீர். இதற்கு என்ன காரணம்?" என்று கேட்டார்.

சமங்கர், "நாரததரே! நான் எல்லா உயிர்களிடத்திலும் நடந்ததையும், நடப்பதையும், நடக்கப் போவதையும், அதன் தத்துவங்களையும் நன்கு அறிகின்றேன். அதனுல் மனவருத்தமில்லாமல் இருக்

# கதிர்காமம்

## திரு. கி வா. ஜகந்நாத ஐயர் அவர்கள்

(24-ஆம் பக்கத் தொடர்ச்சி)

கோயிலா அது? மனதிலே பக்தியில்லாதவர்களுக்கு, அதுவும் தமிழ்நாட்டுக்கோயில்களைத் தரிசித்தவர்களுக்கு, அது கோயிலாகவே தோன்ருது. ஓட்டு வில்லைக் கூரை வேய்ந்த சாவடி போலத்தோன்றுகிறது! ஆனுல் அந்தக் கூரையின் மேல் மூன்று இடங்களில் மூன்று பொற்கலசங்கள் இருக்கின்றன. அவற்றைக் காணும்போதுதான் கோயில் என்ற நினைவு தருகிறது.

உருவமில்லாத சிவலிங்கத்தை இறைவனுக எண்ணித் தரிசித்துப் பக்தி பண்ண வழி இருக்கும் போது கோபுரமும் மண்டபமும் இல்லாத இந்தச் சாவடியைக் கோயிலாகக் காண வழி இல்லையா? புராணமும்

---

கின்றேன். நமக்கு ஆதாரமில்லாதவர்களும், கண்ணில்லாதவர்களும், மூடர்களும் வாழ்கின்றூர்கள். அறிவும் கண்ணும் படைத்த நாம் ஏன் துன்பப்படவேண்டும்? ஏழைகள் கீரையை யுண்டு வாழ்கின்றூர்கள். நாம் அவர்களைவிட மேலானவர்கள் தாமே. நாம் வருந்தவேண்டிய அவசியம் இல்லையே? அறிஞன் ஒருபோதும் துயரமடையமாட்டான். வருவதும் போவதும் உலகத்தில் இயற்கை. வரவைக் கண்டு மகிழ்வதும், போவதைக் கண்டு வருந்துவதும் கூடாது. இங்குள்ள செல்வம் உறவினர் குலம் கல்வி முதலிய அனைத்தும் பரலோகத்தில் பயன்படமாட்டா. ஆதலால் மனத்தை ஒருமுகப்படுத்துவதுதான் சுகத்துக்கு வழி அகங்காரம் மமகாரம் முதலிய எல்லாவற்றையும் அறவே தள்ளிவிட்டு, நான் சுகதுக்கங்களை யடையாமல் உலகத்தில் காட்சி மாத்திரமாகப் பார்த்துக் கொண்டிருக்கின்றேன்'' என்று கூறினுர்.

யுதிஷ்டிரர், ''பிதாமகரே! நூலறிவில்லாதவனும், எப்போதும் சந்தேகமுள்ளவனும், முயற்சி செய்யாதவனுமான ஒருவனுக்கு மேன்மையடைய வழி யாது?'' என்று கேட்டார்.

### மேன்மைக்கு வழி

பீஷ்மர் ''தரும! நூலறிவில்லாத ஒருவனுக்கு பெரியோர்களுக்குப் பணிவிடை செய்வதும், குருமுகமாக உத்தம நூல்களைக் கேட்பதுவுமே மேன்மையடைவதற்குரிய வழியாகும். (தொடரும்)

துதிகளும் நம்பிக்கையும் இந்தச் சாவடியையே கந்தலோகத்துக்குச் சமானமாக்கியிருக்கின்றன. கதிரேசன், கதிரைவேலன் என்று இலங்கையிலும் தமிழ் நாட்டிலும் வழங்கும் பெயர்களுக்கு மூலம் அந்தச் சிறிய ஓட்டு வில்லைக் கூரை வேய்ந்த சாவடி என்பதை நினைத்துப் பார்த்தால்தான் அதன் மகிமை புலனாகும். அதற்குக் காரணம் என்ன மனிதனுடைய உணர்ச்சிதான். அன்பர்களின் உணர்ச்சிக் குவியலுக்கு அடையாளமாக, கடவுளைக் காண வேண்டும் என்று ஏங்கிய தாபத்தைத் தணிக்கும் அருவியாக, எத்தனை இடையூறுகள் வந்தாலும் பொருட்படுத்தாமல் தீவிர வைராக்கியத்தோடு நாடு கடந்து, கடல் கடந்து காடு கடந்து வரும் பக்தி வேகத்துக்கு இலக்காக அந்த சிறு கட்டடம் நிலவுகிறது. அப்படி எல்லோருடைய மனத்தையும் இழுக்க அதில் என்ன இருக்கிறது? அதுதான் தெளிவாக யாருக்கும் புரியவில்லை!

திருக்கோயிலின் முன் நின்றேன். கோயில் வாசலில் ஒரு பெரிய பழைய மரக்கதவு இருக்கிறது. நாங்கள் சென்றபோது கோயிலில் பூசை முடிந்து பூசகர் கதவை மூடிக்கொண்டு போய்விட்டார். நாங்கள் சொல்லி அனுப்ப, அவர் வந்து கதவைத் திறந்தார்.

கதவைத் திறந்தவுடன் உள்ளே பக்தர்கள் நின்று தரிசிக்கும் இடம் இருக்கிறது. பத்தடி அகலமும் இருபதடி நீளமும் இருக்கலாம். அங்கே பெரிய குத்து விளக்குகளும் தீபச் சட்டிகளும் இருக்கின்றன. அதற்கப்பால் உயர்ந்த மேடைமேல் கர்ப்பக்கிருகம் இருக்கிறது. அதன் வாசலில் திரையிட்டு மறைத்திருக்கிறார்கள். அந்த வாசலுக்குப் படிகள் இருக்கின்றன. கர்ப்பக்கிருகத்தின் கதவுகூட நமக்குத் தெரியாது, திரையைத்தான் காணலாம். அந்தத் திரையில் முருகன் உபய நாச்சியரோடும் மயிலின்மேல் வீற்றிருக்கும் ஓவியம் இருக்கிறது. அந்தத் திரையை இக்காலத்தில் யாரோ உதவியிருக்கிறார்கள், உபயஞ் செய்தார் இன்னார் என்ற குறிப்பும் திரையின் ஓரத்தில் ஆங்கிலத்தில் இருக்கிறது. அதற்குப்பின்னே சில திரைகள் இருக்கின்றன. அவை அவ்வக் காலத்தில் அன்பர்கள் உதவியவை போலும்!

பூசை செய்கிறவர்கள் அந்தத் திரையின் முன் நின்று தூபதீபம் காட்டுகிறார்கள்; அர்ச்சனை செய்கிறார்கள். வழிபடும் பக்தர்களும் அந்தத் திரையைக் கண்டு களிப்பதோடுதான் நிற்கிறார்கள். எந்தக் காலத்திலும் திரையை அகற்றுவதற்கே இல்லை. திரையைக் கண்டவர்களையன்றி திரைக்குப்பின் என்ன இருக்கிறது என்று அறிந்தவர் யாரும் இல்லை. கர்ப்பக் கிருகத்துள் என்ன இருக்கிறது என்ற புதிரை விடுவிப்பவரும் இல்லை. மூன்று கலசங்கள் கூரையின்மேல் இருப்பதனால் மூன்று பகுதிகள் இருப்பது தெரிகிறது. மூன்று மூர்த்திகளோ, மூன்று சக்கரங்களோ அங்கே இருக்கின்றன என்று ஊகிக்கலாம். மூன்று உலகம் என்று சொல்கிறோம்; கண்டவர்கள் யார்? மூன்று

மூர்த்திகள் என்று புராணம் பேசுகிறது. அவர்களைத் தரிசித்தவர்கள் யார்? கதிர்காமத்திலும் மூன்று தங்கக் கலசங்களைக் காணலாமே யன்றி, அவற்ருல் குறிப்பிக்கப் பெறும் மூன்று தெய்விகப் பொருள் கள் இன்ன என்று யாரும் அறிந்திலர்.

இங்கே பூசை செய்கிறவர்கள், சிங்களவர்கள். அவர்கள் பௌத்த மதத்தைச் சார்ந்தவர்கள். கப்புராளைமார் என்று அவர்களைச் சொல் கிருர்கள். பூசை செய்கையில் வாயைக் கட்டிக்கொண்டே செய்கிருர் கள். விபூதிப் பிரசாதம் கொடுக்கிருர்கள். பௌத்தர்களுக்குக் கதிர் காம முருகன் ஒரு காவல் தெய்வம். இங்கே கதிர்காமநாதன் சந் நிதியை அடுத்து ஒரு சிறிய ஓட்டு வில்லைக் குடில் இருக்கிறது. அதைப் பிள்ளையார் கோயில் என்கிருர்கள். கதிர்காமக்கடவுளைக் கத்தரகம தெய்யோ என்று சிங்களவர் வழங்குகின்றனர், தெய்வம் என்பதே தெய்யோ ஆயிற்று. கிராமம் என்பதே கம என்று மாறியது. கத்தர என்பது ஒரு மரத்தின் பெயராம்; கருங்காலி மரம் என்றும் சொல்வர் அந்த மரம் அடர்ந்த இடம் ஆதலின் கத்தரகம என்ற பெயர் வந்த தாம். நம்முடைய நாட்டிலும் சிறந்த தலங்களுக்கு மரங்களால் பெயர்கள் அமைந்திருப்பதை நாம் அறிவோம். சிதம்பரத்துக்குத் தில்லை என்ற பெயர் மரத்திஞல் வந்ததுதான். மதுரைக்குக் கடம்ப வனம் என்ற பெயர் உண்டு. திருவாலங்காடு, திருநெல்லிக்கா என்று மரங்களால் அமைந்த தலப் பெயர்கள் பல. இப்படியே கதிர் காமமும் மரத்தால் பெற்ற பெயரை உடையது என்று தோன்று கிறது. நம் நாட்டுக் கோயில்களில் தலவிருட்சம் இருக்கும். இக் கோயிலில் அரசமரங்கள் இருக்கின்றன.

ஆடி மாதத்தில் கதிர்காமத்தில் திருவிழா நடைபெறுகிறது. அப்போது பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடுவார்கள். திருநாளன்று கப்புராளைமார் எதையோ பரிவட்டத்துக்குள் வைத்து மூடிக் கொண்டு வருவார்கள். பழையபெட்டி என்று சொல்கிருர்கள். அதைக் கொண்டு வந்து மூடிய பரிவட்டத்தோடே யானையின்மேல் ஏற்றுவார்கள், இப்படி ஏற்றும்போது யானை நிற்பதற்குரிய இடம் ஒன்று கோயிலில் இருக்கிறது. ஏற்றிய பிறகு யானை ஊர்வலமாக வரும். அதன்மேல் உள்ள பெட்டியையே யாரும் பார்க்க முடியாது. அப்படி இருக்கையில் அதற்குள் என்ன இருக்கிறதென்று தெரிந்து கொள்வது எப்படி?

பெட்டிக்குள்ளே மாணிக்கத்தால் ஆன விலை மதிக்கமுடியாத முருகன் விக்கிரகம் இருக்கிறது என்று சிலர் சொல்கிருர்கள்.

“ கனகமா ணிக்க வடிவ னேமிக்க
கதிரகா மத்தில் உறைவோனே ”

என்று அருணகிரிநாதர் திருப்புகழில் பாடுகிருர். அவர் காலத்தில் முருகனுடைய திருவுருவம் எல்லோரும் கண்டு தரிசிக்கும்படி இருந்த

தென்றும், பிற்காலத்தில் மாணிக்கங்களைக்கண்டு யாரேனும் கைப் பற்றிவிட்டால் என்ன செய்வது என்ற அச்சத்தால் அவ்விக்கிர கத்தை வெளிக்காட்டுவதில்லை யென்றும் சொல்கிறவர்கள் இருக் கிறார்கள்.

வேறு சிலர், மிகவும் சக்தியுள்ள யந்திரத் தகடு அந்தப் பெட்டிக் குள் இருக்கிற தென்றும், அதனால்தான் இத்தனை மக்கள் இங்கே வந்து வழிபடுகிறார்களென்றும் கருதுகின்றனர். கூட்டம் மிகுதியாக வரும் ஆலயங்களில் யந்திரங்கள் இருப்பது இந்த நாட்டில் பெரு வழக்கு. இதற்கு ஆதாரமாக ஒரு கர்ண பரம்பரைச் செய்தி அங்கே வழங்குகிறது.

காஷ்மீரத்திலிருந்து ஒரன்பர் கதிர்காமத்துக்கு வந்து தவம் புரிந்தார். அவரை முத்துலிங்க சுவாமி என்று வழங்கினர். அவர் இத்தலத்தில் முருகன் பேரருள் உடையவனாக இருத்தலை அறிந்து தம்முடைய ஊருக்கு எடுத்துச் செல்ல வேண்டுமென்று நினைத்தார். அவர் மந்திரசக்தி உடையவர். முருகனுடைய சக்தியை ஆகர்ஷணம் செய்து ஒரு யந்திரத்தில் அடைத்து எடுத்துச் செல்லச் சித்தமாக இருந்தார். புறப்படுவதற்கு முதல் நாள் இரவு, இங்கிருந்த சிங்களத் தலைவருடைய கனவில் வள்ளியம்மை எழுந்தருளி, "என் கணவனை முத்துலிங்க சுவாமி எடுத்துப் போகப் போகிறான், அதைத் தடுத்து எனக்கு மாங்கலியப் பிச்சை தரவேண்டும்" என்று வேண்டிக் கொண்டாள். அவள் சிங்கள வேடர் குலத்திலே உதித்த பெண் ஆதலின் அப்படி வந்து முறையிட்டாள். உடனே சிங்களத் தலைவர் விழித்துக் கொண்டு முத்துலிங்க சுவாமியைக் கையும் களவுமாகப் பிடித்துக் கொண்டார். அவர் ஆகர்ஷணம் செய்து வைத்த யந்திரத் தைப் பெட்டிக்குள் இருந்தபடியே கோயிலிலே வைத்து வழிபட லானார்கள்.

இப்படி ஒரு கதை வழங்குகிறது. இதைக் கொண்டுதான் பெட் டிக்குள் யந்திரம் இருக்கிறதென்று சிலர் சொல்கிறார்கள். சந்நிதி வீதியின் தென்கோடியில் உள்ள வள்ளியம்மை கோயிலுக்கு அருகில் மாணிக்க கங்கைக் கரையில் முத்துலிங்க சுவாமியின் சமாதி இருக்கிறது.

கதிர்காம வேலன் திருக்கோயிலுக்குப் பின்புறம் பெரிய அரச மரம் ஒன்று இருக்கிறது. பௌத்தர்களுக்கு அரசமரம் கடவுளுக்குச் சமமானது. இந்த தலத்துக்குப் பௌத்தர்களும் முஸ்லீம்களும்கூட வந்து வழிபடுகிறார்கள். நான் போயிருந்தபோது எங்களுடனே ஒரு சிங்களவர் வந்திருந்தார். கோயிலில் சில முஸ்லீம்கள் வந்து தொழு வதையும் கண்டேன்.

இந்தக் கோயிலைச் சுற்றிச் சிறிய சிறிய வளைவுள்ள புரைகளில் நாகத்தின் உருவங்கள் இருக்கின்றன. அருகில் தீபம் வைத்திருக் கிறார்கள்.

இந்தக் கோயிலின் எல்லைக்கு அப்பால் கீழ்த்திசையில் இதனோடு ஒட்டியபடியே தேவயானையின் கோயில் இருக்கிறது. அது கிழக்குப் பார்த்த சந்நிதியை உடையது. அதன் விமானம் தமிழ் நாட்டுக் கோயில் விமானத்தைப் போல இருக்கிறது. ஆனாலும் அங்கும் திரைக்குத்தான் பூசை நடக்கிறது. வள்ளியம்மை கோயிலிலும் திரைதான், ஊரிலுள்ள மடங்களில் சில சந்நிதிகள் உண்டு. அங்கும் திரை போட்டிருக்கிறார்கள். கதிர்காமமே திரைமயம்!

தெய்வயானை கோயிலில் கல்யாண மண்டபம் என்ற இடம் இருக்கிறது. அங்கே ஒரு துறவி இருக்கிறார். பரம்பரையாகத் தெய்வயானை கோயிலின் நிர்வாகம் இவரைப் போன்ற துறவிகளின் கையில் இருந்து வருகிறது.

எல்லாவற்றையும் தரிசித்துக் கொண்டு வள்ளியம்மை கோவிலுக்கு வந்தோம். அதன் அருகில் ஒரு முஸ்லிம் பக்தருடைய சமாதி இருக்கிறது. முத்துலிங்க சுவாமியின் தொண்டர் அவர் என்று சொல்கிறார்கள். சில மடங்களுக்குள்ளே போய்ப் பார்த்தோம். தமிழ் நாட்டிலிருந்து வரும் பக்தர்கள் தங்குவதற்கு ஏற்றபடி அவை அமைந்திருக்கின்றன. அவற்றில் உள்ளவர்கள் பக்தர்களிடமிருந்து வாடகை பெற்று ஜீவனம் செய்கிறவர்கள்.

ஒருவாறு கதிர்காமத் தலத்தைத் தரிசித்தேன்; அமைதியாகத் தரிசித்தேன்; கண்ணாலே கண்ட காட்சிகள் அதிகம் இல்லை. ஆனால் கருத்தால் உணர்ந்த காட்சிகள் பல; உடம்பு புளகிப்ப நின்றதும் உண்டு.

எங்கோ காட்டுக்கு நடுவில் வேடர்கள் வாழும் இடத்தில் அவர்கள் செய்யும் பூசையை ஏற்றுக் கொண்டு முருகன் அருட்பெருங் கடலாக எழுந்தருளியிருக்கிறான்.

"வனமுறை வேடன் அருளிய பூசை
மகிழ்கதிர் காமம் உடையோனே"

என்று அருணகிரிநாதர் பாடுகிறார். கண் காணா மூலையிலே கதிர்காமம் இருக்கிறது. கருத்தும் காணா வகையிலே பரம ரகசியமாகக் கதிர்காமப் பொருள் மறைந்திருக்கிறது. ஆனாலும் அந்தத் தலத்தின் பெருமை எவ்வளவு காலமாக, எவ்வளவு விரிவாகப் பரவியிருக்கிறது! எத்தனை உள்ளங்கள் அதனைக் காணவேண்டுமென்று துடிக்கின்றன! ஒரு முறை கண்ட பிறகும் மீட்டும் மீட்டும் செல்லவேண்டும் என்று ஆர்வம் பூண்டவர்கள் எத்தனை பேர்!

இவ்வளவும் பக்தியினால் விளையும் விளைவுகள்; இறைவனுடைய திருவருட் கூத்தின் பிரபாவம். எவ்வளவு பேர் போய்க் கண்டார்கள்; காண்கிறார்கள்; இனியும் காண்பார்கள். அவர்கள் அடையும் ஆனந்தத்துக்கும் குறைவில்லை. ஆனால், "கதிர்காமத்தின் இரகசியத்தைக் கண்டீர்களா?" என்று கேளுங்கள். "கண்டும் கண்டிலேன் என்ன கண் மாயமே!" என்றுதான் சொல்வார்கள்.

## எமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. 6-00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | ரூ. 3-00 |
| 3. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. 1-00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற் படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | அச்சில் |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | அச்சில் |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்றுவது தொகுதி (மூன்றுவது படைவீடு—பழநி) | ரூ. 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலை) | ரூ. 2-50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோருடல் முதற்பாகம் | ரூ. 5-00 |
| 9. | திருப்புகழ் விரிவுரை—ஆரும் தொகுதி (குன்றுதோருடல் இரண்டாவது பகுதியும், பழமுதிர் சோலையும்) | ரூ. 5-00 |
| 10. | மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரரார் பாடல்களுடன் கூடியது | ரூ. 5-00 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. 2-00 |
| 12. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. 0-50 |
| 13. | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 14. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. 0-50 |
| 15. | சிந்தனைத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 16. | மணிமொழிகள் | ரூ. 0-50 |
| 17. | அநசூயை (வரலாறுகள்) | ரூ. 1-00 |

---